[2nd March 1961

(c) No separate Fair Price Shops has been opened exclusively to cater the people dwelling in slum areas. The 96 shops so far opened in the City cater to the needs of all the poor people including slum dewellers.

* 520 Q.—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether any Fair Price Shops have been opened in Tiruttani taluk, Chingleput district, for seling rice;

(b) if so, how many, taluk-war; and

(c) the amount of rice sold in them per month?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Yes Sir.

(b) Twenty two Fair Price Shops in Tiruttani taluk and nineteen Fair Price Shops in Pollipet sub-taluk have been opened.

(c) A quantity of 260 bags or 520 maunds or rice per month is sold in each Fair Price Shop.

* 521 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Home be pleased to state the number of Fair Price Shops opened so far during the current year and the total quantity of rice issued through these shops, month by month up to December 1960?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A total number of 441 Fair Price Shops have been opened in the State as a whole up to 31—12—1960. A quantity of 1882 tons has been issued up to 15—12—1960 through the shops according to the information available.

* 522 Q.—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether the T.U.C.S. branches in the City of Madras are allowed to sell rice to the public as Fair Price Shops;

(b) how many such branches of T.U.C.S. have been opened to sell rice in slum areas ; and

(c) how many instances of T.U.C.S. branches indulging in black marketing activities have been brought to the notice of the Government?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Yes Sir.

(b) 52 branches of the T.U.C.S. functioning in Madras City are distributing rice. These shops, though they are not directly located in slum areas, cater not only to the needs of the poorer people in the built up areas but also to those living in the slums.

(c) Only one case in which a branch of the T.U.C.S. was alleged to have sold 16 Madras Measures to a person without bill has been reported. The matter is under investigation

2nd March 1961]

Sri K. VINAYAKAM : Are the Government aware of the fact that these Fair Price Shops are intended to cater to the needs of the needy who cannot pay higher prices for better quality rice? if so, may I know, what steps have been taken by the T.U.C.S. authorities to locate these shops in areas where there is actual demand, viz., the slum areas?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : Sir, the Government have sanctioned and opened Fair Price Shops only because they were aware that there was need for the poor people to get rice at fair, lesser prices. The Fair Price Shops are distributed throughout the areas concerned and the poverty of the slum areas is also taken into account when the Fair Price Shops are located in the various places.

**Sri M. KALYANASUNDARAM** : இந்த 441 நியாயவிலைக் கடைகளும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கின்றனவா? சமீபத்தில் எந்த ஜில்லாவிலாவது இந்த நியாயவிலைக் கடைகள் மூடப்படும் என்று முடிவு எடுக்கப் பட்டிருக்கிறதா? அப்படியானல் எந்தெந்த ஜில்லாக்கள், என்னென்ன காரணங்கள்?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : பெப்ரவரி முடிவோடு நியாயவிலைக் கடைகளை மூடி விடுவது என்று ஒரு முடிவு செய்யப் பட்டது. ஆனல் அதற்குப் பிறகு சிற்சிலயிடங்களில் தொடர்ந்து மார்ச் மாதத்தில் கூட நியாயவிலைக் கடைகள் இருந்தால் நலம் என்று தெரிவிக்கப்பட்டது. அதன் மேல் அரசாங்கம் கலெக்டர்களுக்கு அந்தந்த மாவட்டங்களில் நிலைமையை ஆராய்ந்து எந்தளவு கடைகளை மூடாமல் மார்ச் மாதத்தில் வைத்துக் கொள்ளமுடியுமோ அந்தளவு வைத்துக் கொள்ளலாமென்று மறுபடி உத்தரவு இடப்பட்டது. ஆக மார்ச்சிலும் அக் கடைகள் இருக்கின்றன.

Sri K. VINAYAKAM :While being grateful to the Government for the retention of these shops in Tirutani and Pallipet sub-taluk, is the Hon. Minister aware of the fact that even though revenue officials on the spot have recommended opening of further shops in the Pallpiet sub-taluk, the Collector has not take any action in spite of the directions from the Government and if so, will the Government give fresh instructions to open those shops in the taluk where there is actual need for them?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I may tell the hon. Member that the Collector is also a revenue official and he is even called 'Thandal Nayagam'. He does take into account the recommendations of the subordinate officers and he has got the responsibility to decide and recommend to the Government where fair price shops have to be opened and in what places.

**Sri R. SRINIVASA IYER** : இந்த நியாய விலைக் கடைகளில் கொடுக்கப்படுகிற அரிசி பூராவும் விற்கப்படவில்லையென்று எந்த ஜில்லாவிலிருந்தாவது சர்க்காருக்கு ரிப்போர்ட் வந்திருக்கிறதா?

கோதுமையை நிறைய சப்ளை செய்ய, முன்பு இரண்டு டன் கொடுத்ததை இப்பொழுது 5 டன்னாக கொடுக்க ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நியாயவிலை கடைகளில் கொடுக்கப் படுகிற அரிசியைவிட நல்ல ரக அரிசி வாங்கிச் சாப்பிட சக்தியுள்ளவர்கள் இந்த அரிசியை வாங்க மாட்டார்கள். ஆனால் எந்த ஜில்லாவிலும் பூராவும் இந்த அரிசியை யாரும் கேட்பார் இல்லை என்ற தகவல் வரவில்லை. ஆனால் கோதுமையை தாராளமாக கொடுக்க இப்பொழுது ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது.

SRI A. MARIAPPAN : சேலம் நகரில் மேற்கொண்டு கடைகள் திறக்க வேண்டுமென்று கோரிக்கைகள் இருக்கும்போது நிவாரணக் கடைகள் எல்லாம் மூடப்பட்டு விட்டன. அவைகளை மீண்டும் திறக்க சர்க்கார் முயற்சிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்போதைக்கப் போது சம்பந்தப் பட்ட கலெக்டர்களை கேட்கிறோம். அவர்கள் அபிப்பிராயப்படி நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப் படுகிறது. சட்டமன்ற அங்கத்தினர்கள் இங்கு ஏதாவது தெரிவித்தால் அதையும் கலெக்டர்களுக்கு அனுப்புகிறோம். கனம் அங்கத்தினர் அவர்கள் கலெக்டரிடம் பேசி ஏதாவது சிலயிடங்களில் கடைகள் இருக்க வேண்டுமென்றால் வைத்துக் கொள்ளலாம். ஆனால் இப்பொழுதுள்ள நிலைமையில் புதிதாக கடைகள் திறப்பதாகயில்லை.

SRI K. VINAYAKAM : Arising out of the answer to clause (c) of Question No. 522, what action was taken by the Government against the T.U.C.S. Branch which committed a default in the issue of rice without any proper identification of the party who purchased rice?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have already stated that the matter is under investigation. Suitable action is being taken.

SRIMATHI T. N. ANANDANAYAKI : Sir, T.U.C.S. Branches are kept open only during specific hours and so labourers who return late at night are not able to get rice. Has any complaint of that sort been brought to the notice of the Hon. Minister and if so, what action has been taken so far?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I have not received any such complaint. If labourers go to factories, some other member of their families can go and take rice.

SRI A. A. RASHEED : May I know whether Burma rice is sold in all those shops? In view of the fact that Burma rice is sold at a cheaper rate, will the Government increase the supply of Burma rice to those Fair Price Shops?

2nd March 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is not necessarily Burma rice that is sold. Perhaps sometimes Burma rice is sold. No doubt Burma rice is cheaper but we cannot import rice to the extent people would require and distribute it at reduced prices.

SRI A. GOVINDASAMY : தென் ஆற்காடு மாவட்டத்தில் மொத்தம் இதுவரை 40 கடைகள்தான் திறக்கப்பட்டிருக்கின்றன. அதை அதிகரிக்கவேண்டுமென்று தென்ஆற்காடு ஜில்லா கலெக்டர் அவர்கள் அரசாங்கத்தினிடம் கோரிக்கைகள் விடுத்திருந்தும் அதைக் கவனிக்காதிருப்பதற்குக் காரணமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எனக்குத் தெரிந்த வரையில் ஒரு கலெக்டர் இன்னும் அதிகப்படியான கடைகள் வேண்டுமென்று முன்பே தெரிவித்திருந்தால் அப்போதே அவைகள் அனுமதிக்கப் பட்டிருந்திருக்கும்.

SRI T. KARIA GOUNDER : தமிழ்நாடு பூராவும் கொடுக்கப் பட்டிருக்கிற நியாயவிலைக் கடைகள் கூட்டுறவு முறையில் கொடுக்கப் பட்டுள்ளதா ? தனியார்களுக்கு கொடுக்கப்பட்டுள்ளதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அநேகமாக கூட்டுறவு ஸ்தாபனங்கள் மூலம்தான் கொடுக்கப் பட்டு வருகிறது. ஒன்றிரண்டு இடங்களில் கூட்டுறவு ஸ்தாபனங்கள் தயாராகயில்லை என்றால் அப்பொழுது தனிப்பட்ட நபர்களுக்கு இந்த நியாயவிலைக் கடைகள் வழங்கப்பட்டிருக்கின்றன.

SRIMATHI HEMALATHA DEVI : கூலி வேலை செய்துவிட்டு வருகிறவர்கள் அந்தக் கூலியைக் கொண்டுதான் அரிசி வாங்க வேண்டியிருப்பதால் டீ.யூ.ஸி.எஸ்.-யை இரவு எட்டு மணி வரையில் திறந்து வைக்க அமைச்சர் அவர்கள் ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு அவசியமிருக்கிறது என்று இன்னும் அரசாங்கத்திற்கு புலப்படவில்லை. இப்பொழுது எல்லாக் கடைகளும் நல்லமுறையில் நடந்து கொண்டிருக்கின்றன. நியாயவிலைக்கடைகளில் அரிசி வேண்டுமென்றால் சிலயிடங்களில் கொஞ்சம் அசௌகரியத்தைப் பொருள்படுத்தக் கூடாது.

SRI R. SWAMINATHA MERKONDAR : புஞ்சைப் பிரதேசங்களில் விவசாயம் செய்யும் கூலிகளுக்கு கூலி மிகவும் குறைவாகயிருப்பதால் அவர்கள் குறைந்த விலைக்கு அரிசி பெற அந்தப் பிரதேசங்களில் நியாயவிலைக்கடைகளை தொடர்ந்து நடத்த அனுமதி அளிக்கப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தஞ்சை மாவட்டத்தில் கூட நியாயவிலைக்கடைகள் அமைக்கப் பட்டிருக்கிறதென்றால் தஞ்சை ஜில்லாவிலும் புஞ்சைப் பிரதேசங்கள் இருக்கின்றன. சிலபேர்களுக்கு இது வேண்டியிருக்கிறதென்பதை அரசாங்கம் உணர்ந்துதான் இது ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

[2nd March 1961

**Sri K. ANBAZHAGAN** : இத்தகைய நியாயவிலைக் கடைகள் அனுழதிக்கப்பட்ட இடங்களில், தனியார் சிலருக்கு அனுமதிக்கப் பட்ட கடைகளில் ஒன்றிலிருந்து தஞ்சை ஜில்லாவில் ஒரூரில் தரப்பட்ட எல்லா அரிசியையும் தனிப்பட்ட ஒருவருக்கு நேரடி யாக விற்று விட்டார்கள் என்ற புகார் அமைச்சர் அவர்களுக்கு வந்ததா? அதுபற்றி ஏதாவது விசாரித்திருக்கிறார்களா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அம்மாதிரி தகவல் ஒன்றும் எனக்கு வரவில்லை. ஆனால் அங்கத்தினர் அவர்களிடம் இப்படிப்பட்ட தகவல் இருந்தால் எனக்குத் தெரிவிக்க கோரு கிறேன்.

**Sri M. C. MUTHUKUMARASWAMY** : சமீபத்தில் பெய்த மழை காரணமாக சீர்காழி, நன்னிலம், நாகப்பட்டினம் போன்ற இடங்கள் பாதிக்கப்பட்டிருப்பதால் அவ்விடங்களில் நியாயவிலைக் கடைகள் வைப்பதற்கு அரசாங்கம் முன்வருமா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இப்பொழுது என்னென்ன ஏற்பாடுகள் செய்யப் பட்டிருக்கிறதோ பரிசீலனையை யொட்டி, அதற்கு மேல் ஒன்றும் செய்யவேண்டிய அவசியமில்லை யென்று இந்த சர்க்கார் கருதுகிறது.

**Sri K. VINAYAKAM** : Sir, the Fair Price Shops in the Tirutani taluk have been allowed to continue until further orders by the Board of Revenue. Will the Hon. Minister issue instructions that the shops should be continued for a few more months as the impending harvest is supposed to be a failure?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : I would tell the hon. Member that he should not wish that those conditions would continue indefinitely. The Government will certainly consider the position. The Collector will review the position obtaining in the Tirutani taluk by the end of March and then decide whether they should continued further or not.

**Sri A. GOVINDASAMY** : மேஜை மீது வைக்கப்பட்டுள்ள அறிக்கையில் சென்னையிலுள்ள 100 டிவிஷன்களில் சிலயிடங்களில் கடைகள் இல்லாமலும் சிலயிடங்களில் இரண்டு கடைகள் இருக்க வும் காரணம் என்ன? கடைகள் இல்லாத இடங்களில் கடைகள் திறக்க அரசாங்கம் யோசிக்குமா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இதையெல்லாம் சென்னை கலெக்டரிடம் கேட்டு அவர்கள் சொல்லியபடி வைத்திருக் கிறோம்.

**Sri K. PONNIAN** : ஆளியார், பாலயார், சோலையாறு போன்ற திட்டப் பகுதிகளில் நியாயவிலை கடைகளில் கொடுக்கும் அரிசி ஜனங்களுக்கு போதவில்லை. அதை அதிகப்படுத்த அரசாங்கத் திற்கு உத்தேசமுண்டா?

2nd March 1961]

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கனம் அங்கத்தினர் அவர்கள் திரும்பி தனது தொகுதிக்கு போகும்போது கலெக்டர் அவர்களிடம் இதைச் சொன்னால அவாகள் கவனித்து வேண்டியது செய்வார்கள்.

*Fruit processing units*

* 523 *Q*.—SRI N. K. PALANISAMI :
SRI T. DANIEL : } Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to set up an Industrial Estate for fruit processing units in the City of Madras with the aid of the Union Government; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) and (b) A suggestion has been received from the Marketing Development Officer, Fruit Products, Government of India, Ministry of Food, Madras, to establish an Industrial Estate for fruit processing in the State. The matter is under examination.

**SRI N. K. PALANISAMI** : இதற்கு வேண்டிய "ரா மெட்டீரியல்ஸ்" எங்கு கிடைக்கும்?

THE HON. SRI R. VENKATARAMAN : பழங்கள்தான் "ரா மெட்டீரியல்ஸ்". எல்லா ஊர்களிலிருந்தும் இதை வாங்கி வருகிறார்கள்.

**SRI P. M. MUNUSAMI GOUNDER** : இதுமாதிரி பழங்களைப் பக்குவப்படுத்தும் யூனிட்டுகள் தமிழ்நாட்டில் வேறு எங்கேயாவது நிறுவப்பட்டிருக்கிறதா? அப்படியானால் அவை எங்கே?

THE HON. SRI R. VENKATARAMAN : இங்கு சென்னை நகரத்திலேயே "ப்ரூட்நிக்", "ப்ரூட்டோன்" என்று பலவிதமான பழரச பானங்கள் செய்யப்படுகிறது. அவை, "கான்ஸென்ட்ரேட்டட் ஜூஸ்" வாங்கி "ஹைஜீனிக்" முறையில் தயாரிக்கும் திட்டம். அந்தவிதமான திட்டம், பழரசம் தயாரிப்பதில் ஒன்று. இரண்டாவது, பழங்களை வாங்கி அதிலிருந்து சார் எடுத்து அதை சுகாதாரமுறையில் செய்வது இரண்டாவது முறை. பழங்களை ப்ரசர்வ் செய்யும் யூனிட்டுகள் இருக்கிறதா என்று கேட்டால் தனிக்கேள்வி போடவேண்டும்.

SRI T. T. DANIEL : May I know the estimated cost of establishing such an industrial estate as also the particular kind of fruits which the Government intend to use?

THE HON. SRI R. VENKATARAMAN : It is intended to have ten units for this particular industrial estate. At present there are two views. One is, we may start a separate industrial estate for this, viz., a small kind of industrial colony. Another is to have a separate wing in one of the industrial estates, which we contemplate round about Madras. No decision has been taken as to what